6th August 1965]

**திரு. கே. பாலசுப்ரமணிய அய்யர் :** நான் "மாரல் இன்ஸ்ட்ரக் ஷனைப்" பற்றிப் பேசும்போது, இதைப் பற்றி நினைக்கவில்லை. ஜனங்களுக்கு பொதுவாக Moral instruction வேண்டுமென்று தான் சொன்னேன்.

**திரு. என். வி. நடராசன் :** மதிப்பிற்குரிய எதிர் கட்சித் துணைத் தலைவர் ஸ்ரீ. பாலசுப்ரமணிய அய்யர் அவர்கள் சொல்லிய கருத்தை நான் மறுக்கவில்லை. மற்ற உறுப்பினர்கள் பேசிய கருத்திலிருந்து என் எண்ணத்தைத் தெரிவிக்கிறேன். அந்த கனம் உறுப்பினர்கள் அப்படிச் சொல்லவில்லை என்றால், நான் மகிழ்ச்சி அடைவேன். கல்கத்தாவில் டிராம்வே கட்டணம் உயர்த்தப்பட்டு பெரிய ரகளை ஏற்பட்டிருக்கிறது. அங்கேயுள்ள மாணவர்கள் அந்தக் கலவரத்தில் பங்கு கொண்டிருக்கிறார்கள். நம் மாநிலத்தை எடுத்துக் கொண்டால், அப்படிப்பட்ட பிரச்சினை களில் மாணவர்கள் ஈடுபட்டதே இல்லை. ஆனால் இந்தி எதிர்ப்பு பிரச்சினையில் தான் கலவரம் ஏற்பட்டு, டிசிப்ளின் என்ற கட்டுப் பாடு சீர்குலைந்திருக்கிறது. அதற்கு கூட மாணவர்களை மட்டுமே குறை சொல்வது நியாயமாகாது. எனவே அதை நாம் எல்லோரும் யோசித்து, கல்வித் துறையில் பணியாற்றுகிற பெரிய வர்களும் அவர்களுக்கு நல்ல ஆலோசனைகளைக் கூறி, ஒழுங்கு படுத்த வேண்டும் என்பதில் யாருக்கும் ஆட்சேபனை இருக்க முடியாது. தேசபக்தி மற்றவைகள் எல்லாம் மாணவர்களுக்கு வேண்டும். ஆனால் தேசபக்தி என்றால் எது என்று கூட நாம் சிந்தித்துக் கொள்ள வேண்டும். இங்கே நான் சொல்லப் போவ தைப் பற்றி ஆளுங்கட்சியினர் தவறாகக் கருதக்கூடாது. மதிப்பிற் குரிய அகில இந்திய காங்கிரஸ் தலைவர் காமராஜரைப் பற்றி காங்கிரஸ் தோழர்கள் எவ்வளவு மதிப்பு அளிக்கிறார்களோ, அதில் துளியும் குறையாமல் அவருடைய பொதுப் பணியை நான் மதிக் கிறேன். அப்படிப்பட்ட தலைவரின் பிறந்த தின விழா கொண் டாடுகிற நேரத்தில், மாணவர்கள் அந்த ஜோதி கொண்டு போவது என்ற நிகழ்ச்சி நடக்கிறது. அதைப் பார்த்தவுடனே இன்னொரு கட்சித் தலைவருக்கு விழா கொண்டாடும்போது அவர்களும் அக் கட்சியின் ஆதரவான மாணவர்கள் அந்த மாதிரி ஒரு ஜோதி கொண்டுபோவார்கள். மாணவர்களை அரசியலில் பயன்படுத்தக் கூடாது என்று முன்பு இங்கே கல்வி அமைச்சராக இருந்த மதிப் புக்குரிய சி. சுப்ரமணியம் அவர்கள் சொன்னார்கள். அதை எல்லோருமே கடைப்பிடித்து வந்தோம். ஆனால் இடையிலே அந்தக் கட்டுப்பாடு அல்லது அப்படி பேசித் தீர்க்கப்பட்ட ஒப்பந்தம் என்று சொல்லாவிட்டாலும், அந்த முறை ஆளும் கட்சியினரால் இந்த வகையிலே பாழாக்கப்பட்டுவருகிறது. எதிர் காலத்தில் எந்தக் கட்சியாக இருந்தாலும் மாணவர்களை தங்கள் கட்சிப் பணிகளுக்கு அழைக்காமல், ஈடுபடுத்தாமல் இருந்தால், உள்ளபடியே மீண்டும் மாணவர் உலகம் நல்ல முறையில் கட்டுக் கோப்பாக வாழ்ந்து எதிர்காலத்தில் கனம் உறுப்பினர்கள் ஆசைப் பட்டதைப் போல் இந்த நாட்டை ஆளும் திறமையுடன் பதவி

களில் அமரும் தகுதியைப் பெறுவார்கள் என்று நம்புகிறேன். கல்வித் துறையைப் பற்றி எதிர் கட்சித் துணைத் தலைவர் அவர்கள் நல்ல முறையில் எடுத்துச் சொன்னார்கள். அதை விட அதிகமாக நான் ஒன்றும் சொல்ல வேண்டியதில்லை என்று கருதுகிறேன்.

பாலங்களை விரிவாக்குவதைப் பற்றி நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தில் குறிப்பிட்டிருக்கிறார்கள். முன்பு கூட இதே மன்றத்தில் அதைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறேன். பேசின் பிரிட்ஜ் ஸ்டேஷனுக்கு அடுத்தாற்போல் மூன்று பாலங்கள் இருக்கின்றன. அவைகள் எந்தெந்த ரோடுகளை எதிர் நோக்கி இருக்கின்றன என்றால், ஒரு பாலம் கல்கத்தா அதாவது நெல்லூருக்குப் போகும் டிரங்க் ரோட்டை எதிர்நோக்கி இருக்கிறது. மற்றொன்று பி அண்ட் சி. மில் பெரம்பூர் ரெயில்வே தொழிலாளர்கள் வேலை செய்யும் அந்த பகுதியை நோக்கி இருக்கிறது. மூன்றாவது பாதை அந்த பக்கிங்ஹாம் கால்வாய்க்கு பாலம் போல் இருக்கிறது. இந்த மூன்று பாலங்களிலும் காலை 4 மணிக்கு வந்து பார்த்தால், லாரிகளும், கைவண்டிகளும் மூட்டைதூக்கி வருபவர்களும் கொத்தவால் சாவடிக்கு வரும் சிறு கடைக்காரர்களும், வியாபாரிகளும், பெரம்பூர், சூளைப் பகுதிக்கு போகிற திரும்புகிற தொழிலாளர்களும், படும் தொல்லை சகிக்க முடியாது. இந்த லட்சணத்தில் 5 மணிக்கு பஸ் போக்குவரத்து ஆரம்பித்துவிட்டால், நெருக்கடி முற்றி தொழிலாளர்கள் பாதையைக் கடந்து போக முடியாத அளவுக்கு நெரிசல் ஏற்பட்டு சில சமயங்களில் விபத்துகளும் உண்டாகின்றன. ஆகவே பாலங்களை விரிவுபடுத்தும் திட்டத்தில் அந்த மூன்று பாலங்களையும் உடனடியாக அகலப்படுத்த வேண்டும். அதே போல் தமிழ்நாட்டில் எங்கெங்கே அப்படிப்பட்ட நெரிசல் இருக்கிறதோ அங்கே எல்லாம் பாலங்களை விரிவு படுத்த வேண்டுமென்று தெரிவித்துக் கொள்கிறேன்.

5-00 p.m. அடுத்து, ஸ்டாம்பு விற்பனை செய்யும் தோழர்களுக்கு கொடுத்து வந்த 6¼ சதவிகிதத்தை 2 சதவிகிதமாக குறைக்கப்பட்டிருப்பதால் ஏறத்தாழ 5,000 குடும்பங்கள் வருவாயில்லாமல் பாதிக்கப்பட்டிருக்கின்றனர். ஐந்தாண்டுத் திட்டங்களை நிறைவேற்றுவது என்பது மக்களின் வறுமையை நீக்கவும் வாழ்வளிக்கவும் பயன்படவேண்டும். அந்த நோக்கத்தில் ஸ்டாம்பு விற்கிறவர்கள் பெற்று வந்த 6¼ சதவிகிதத்தை குறைக்காமல் இருக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அதேபோல அணிகலத் தொழிலாளர்கள் தங்கக் கட்டுப்பாட்டினால் வாழ்விழந்து பாதிக்கப்பட்டிருப்பதை சர்க்கார் உணர்ந்து சிறு சிறு தொழிற்சாலைகளில் வேலை வாய்ப்புக் கிடைக்கும்படியான திட்டத்தை நிறைவேற்றி வருகிறார்கள். இல்லை என்று நான் சொல்லவில்லை. இருந்தாலும் நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தில் நல்லதொரு தொழில் வாய்ப்பினை அளிக்கும் பயிற்சிக் கூடங்களை இன்னும் அதிகப்படுத்தி அவர்களுடைய நெருக்கடியை நீக்க வகை செய்யவேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன்.

6th August 1965] [திரு. என் வி. நடராசன்]

நமது மாநிலத்தில் தொழில் துறை பெருமைப் படத்தக்க அளவுக்கு வளர்ந்து வருகிறது என்பதை எல்லோரும் ஒப்புக் கொள்வார்கள். நாங்கள், திராவிட முன்னேற்றக் கழகத்தவர்கள் அரசியலில் உள்ள கருத்து வேறுபாடுகளினுல் உண்மைகளை ஒப்புக்கொள்வதில் தயங்கியதில்லை. ஆனல் இப்போது இருக்கிற தொழில் துறையெல்லாம் தனியார் துறையில் அமைகிறதே தவிர சர்க்கார் துறையில் அதிகமாக அமையாமல் இருக்கிறது. நேற்று இங்கு பேசிய கனம் உறுப்பினர் திரு. கே. வி. ராமசாமி அவர்கள் கூட உருக்கமாக எடுத்துச் சொன்னர்கள். உள்ளபடியே மனம் வேதனைப்பட்டேன். நாட்டிற்காக உழைத்த எவ்வளவுபேர் உடைந்த உள்ளத்தோடு இருக்கிருர்கள் என்பதை விளக்கிச் சொன்னர்கள். பொதுவாழ்வில் இருப்பவர்களுக்கிடையே கட்சி வேறுபாடு இருந்தாலும் நாட்டிற்கு உழைத்தவர்களுக்கு நன்றி காட்டவேண்டும். அப்பேர்ப்பட்ட நிலையில் பல்லாயிரக்கணக் கான பேர்கள் வாழ்விழந்து வறுமையில் உழன்று கொண்டிருக்கும் நேரத்தில் சர்க்காரே தொழில் துறைகளை மேற்கொள்ளாமல் தனியார் துறையைப் பெருக்குவதில் யாருக்கு லாபம் என்று கேட்கிறேன். குறிப்பிட்ட இருபது முப்பது பேர்களுக்குமட்டும் ஏகபோகமாகப் போகக்கூடிய பெரும் லாபம் சர்க்காருக்குச் சொந்தமானல் உண்மையிலேயே வறுமையை ஓரளவாகிலும் நாட்டிலிருந்து விரட்ட முடியும். ஆதலால் தனியார் துறையைக் கொழுக்கவைக்கும் வேலையில் சர்க்கார் ஈடுபடக்கூடாது. நான்காவது திட்டம் நிறைவேறினல், திட்ட முடிவில் 18 அவுன்சு அளவில் வழங்கப்படுமென்று மதிப்பீட்டில் குறிப்பிட்டிருக் கிருர்கள். மிக்க மகிழ்ச்சி. ஆனல் இது ஏட்டளவிலா நடை முறையிலா என்று போகப்போகத் தெரியும். கேள்வி நேரத்தின் போது கூட நமது அமைச்சர் அவர்கள் சுற்றுலா பற்றி குறிப் பிட்டார்கள். ஏழைகள் இயற்கைக் காட்சிகளைக் கண்டு களிப் புற, குற்ருலம், உதகை, கோடைக்கானல் போன்ற பகுதிகளுக்குச் சென்று அனுபவிக்கமுடியாத நிலையில் இருக்கிருர்கள். அதனல் ஏழைகள் காணும் அளவுக்கு ஏற்காட்டிலே அவ்விதமான அமைப்புகளை ஏற்படுத்தலாம். மதுரை மாவட்டத்திலே சுருளி யிலும் அதை விரிவுபடுத்தலாம். அதன் மூலமாக ஏழை, நடுத்தர மக்கள் இயற்கை வனப்பை அனுபவிக்கும்படி செய்தவர்களா வோம். இறுதியாக நான் வலியுறுத்துகிறேன். சர்க்கார் இன்றைய நிலைமையில் எவ்விதமான எதிர்ப்பு வந்தாலும் திட்டத்தை கைவிடக்கூடாது. திட்டமில்லாத செயல் உருப் படாது, திட்டம் வேண்டாமென்று, கனம் எஸ். கே. பட்டீல் சொல் கிருர் என்றும் அங்கே அவர் சொல்கிருர், இவர் கூறுகிருர் என்று சொல்லப்பட்டாலும் சர்க்கார் இந்தத் திட்டங்களைக் கைவிடாமல் நிறைவேற்ற முனையவேண்டும். முதலில் செய்வது என்ன? இரண்டாவது செய்வது என்ன? என்பதில் வேண்டுமானல் சில மாற்றங்களைச் செய்யலாமே ஒழிய திட்டத்தை அடியோடு நிறுத்துவது கூடாது. ஆனல் அப்படி நிறைவேற்றும் திட்டம்

சந்ததியினர் தலைநிமிர்ந்து வாழ வேண்டியதற்கான அடிப்படையில் குறைவின்றி அமையவேண்டுமென்று கேட்டுக்கொண்டு என்னுடைய வார்த்தையை முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

*** திரு. கே. எஸ். அப்துல் வகாப் :** சட்டமன்றத் தலைவர் அவர்களே, நான்காவது ஐந்தாண்டுத் திட்ட விவாதத்தில் பங்குகொள்வதில் பெருமகிழ்வு கொள்கிறேன். சமர்ப்பிக்கப்பட்டிருக்கும் இந்தத் திட்டத்தை ஆராய முற்பட்டதில் தேசிய அடிப்படையில் 22,600 கோடி ரூபாய் திட்டத்திற்காக ஒதுக்கப்பட்டிருக்கிறது. இதில் பொதுத் துறையில் 15,620 கோடி ஒதுக்கப்பட்டிருக்கிறது என்பதைப் பார்க்கும்போது எஞ்சி இருக்கிற 6,980 கோடி பிரைவேட் செக்டாருக்கு ஒதுக்கப்பட்டிருப்பது புலனாகிறது. பொதுத் துறைக்கு ஒதுக்கப்பட்ட 15,620 கோடியில் 8,095 கோடி மாகாணங்கள் திட்டம் வகுக்க ஒதுக்கப்பட்டிருக்கிறது. இதில் நமது மாகாண பங்குக்கு 750 கோடி கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்தத் தொகை நமக்கு விகிதாசாரப்படி பொருத்தமானதா என்பதை நாம் ஆராய வேண்டும். நம் மாகாணத்தின் ஜனத்தொகை அடிப்படையில் பார்த்தால் உத்தேசமாக பத்தில் ஒரு பங்கு வர வேண்டும். பத்து என்று வைத்துக் கணக்குப் பார்த்தால் நமக்கு 809½ கோடி ஒதுக்கப்படவேண்டும். அப்படியென்றால் 59 கோடி குறைவாக ஒதுக்கப்பட்டிருக்கிறது என்று பொருள்படுகிறது.

**கனம் திரு. ஆர். வெங்கட்டராமன் :** ரயில்வே எல்லாம் சேர்ந்திருக்கும்.

**திரு. கே. எஸ். அப்துல் வகாப் :** அமைச்சர் அவர்கள் மொத்தமாக செண்ட்ரல் பிராஜக்டையும் சேர்த்துக் கணக்கு போடப்பட்டிருக்கிறது என்று குறிப்பிட்டார்கள். அதற்காக நன்றி தெரிவித்துக் கொள்கிறேன். செண்ட்ரல் பிராஜெக்டில் 65½ கோடி இந்த மாகாணத்திற்காக ஒதுக்கப்பட்டிருப்பதாகவும் தெரிகிறது. இந்தப்படி கணக்கு பார்த்தால் நமக்கு மொத்தத்தில் இரண்டையும் சேர்த்து விகிதாசாரப்படி 45 கோடி கூடுதலாக ஒதுக்கப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. இது கூடுதல் என்றால் நான் மற்றொரு புள்ளி விவரத்தைச் சொன்னால் உண்மையில் இது குறைவாக இருப்பதை காணலாம். மொத்த திட்ட அளவில் 15,620 கோடி பொதுத் துறைக்கு ஒதுக்கப்பட்டிருக்கிறது. எஞ்சிய தொகை 7,515 கோடி இருக்கிறது. இது செண்ட்ரல் கவர்ன்மெண்ட் சார்பில் அமுல்படுத்தப்படும் திட்டங்களுக்கு செலவிடப்படும் என்பதாக அறிவிக்கப்பட்டிருக்கிறது. இந்தத் தொகையை பல மாகாணங்களுக்கு திட்டங்கள் வகுத்து செலவிடுகிறார்கள். அதில் நம் மாகாணத்திலும் ஒரு பங்கு செலவிடத்தான் செய்கிறார்கள். விகிதாசாரக் கணக்குப்படி இதிலும் நமக்கு ஒரு உரிமை உண்டு.

**கனம் திரு. ஆர். வெங்கட்டராமன்:** கணக்கு சரியில்லை. மொத்தம் ஸ்டேட்டும் செண்ட்ரலும் 8,095 கோடி நம்முடைய ஜனத்தொகை மொத்தத்தில் 8 சதவிகிதம். அதனால் நமக்கு வரவேண்

6th August 1965] [திரு. ஆர். வெங்கட்டராமன்]

டியது 647.6 கோடி. ஆனால் 750 கோடி ஒதுக்கியதற்குக் காரணம் முன்னைய திட்டத்தில் 291 கோடி கொடுக்கப்பட்டு 340 கோடி செலவு செய்திருக்கிறோம். அதை அடிப்படையாக வைத்து கொடுத்திருக்கிறார்கள்.

(Sri S. K. Sambandhan—Vice-Chairman in the Chair).

5-10 p.m.

திரு. கே. எஸ். அப்துல் வகாப் : எட்டு சத விகிதம் என்று கணக்கு வைத்துக் கொண்டாலும், சென்ட்ரல் ப்ரொஜெக்ட்டிலிருந்து ஒதுக்கப்பட்ட தொகை மிகக் குறைவாக இருக்கிறது என்று நினைக்கிறேன். சென்ட்ரல் ப்ராஜெக்ட் நம் மாநிலத்தில் செயல்படுத்தப்பட வேண்டும் என்று அறிவிக்கப்பட்டிருப்பதற்கு விவரம் ஒன்றும் கொடுக்கப்படவில்லை. சில புள்ளிவிவரங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன சேலம் உருக்காலை Tele-Communication cable industry, heavy plates and vessels, petroleum oil refinery ஆகியவை போன்ற சில பெரிய தொழில்கள்தான் நான்காவது திட்டத்தில் இங்கே மத்திய அரசாங்கத்தின் சார்பில் செயல்படுத்தப்படும் என்று தெரிகிறது. இவைகளில் சேலம் உருக்காலை மட்டும் தான் பெரிய தொழில், மற்றவை சிறிய தொழில்கள். இவைகள் ஒவ்வொன்றுக்கும் ஒதுக்கபட்டுள்ள தொகை எவ்வளவு என்று குறிப்பிடப்படாவிட்டாலும் மொத்தம் 325 கோடி ரூபாய் செலவிடப்படலாம் என்று உத்தேசமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இந்தத் தொகையும் நம் ராஜ்யத்திற்கு வர வேண்டிய விகிதத்திற்குக் குறைவான விகிதத்தில் இருக்கிறது. எனவே இந்த மாநிலத்தில் மத்திய அரசாங்கம் செயல் படுத்தும் திட்டங்களுக்கு இன்னும் கொஞ்சம் அதிகமான பணம் ஒதுக்க வேண்டும் என்று நம் அரசாங்கம் மத்திய அரசாங்கத்திடம் வற்புறுத்த வேண்டும்.

சேலம் உருக்காலை பற்றி இங்கே பெரும் விவாதங்கள் நடந்தன. அப்போது பல மாறுபட்ட கருத்துக்கள் நிலவின. இந்த மாறுபட்ட கருத்துக்கள் சென்ற சில வருஷங்களாக தொடர்ந்து இருந்துவருகின்றன. சேலம் உருக்காலைத் திட்டத்தைப் பொருத்த வரையில், முன்பு இருந்த நிலைக்கும் இப்போதுள்ள நிலைக்கும் உள்ள வித்தியாசம் மலைக்கும் மடுவிற்கும் உள்ள வித்தியாசமாக இருக்கிறது. சேலம் உருக்காலைக்கு எவ்வளவு தொகை எஸ்டிமேட்டில் இருக்கிறது என்று நான் ஒரு தடவை கேட்டபோது 300 கோடி ரூபாய் என்று கனம் அமைச்சர் பதில் சொன்னார் என்று நினைக்கிறேன். அந்த 300 கோடி ரூபாய் இப்போது 170 கோடி ரூபாயாக மாறியிருப்பதைக் காண்கிறோம். இது விரும்பத்தகாத நிலை. இப்போது உருக்காலைத் திட்டம் விசாகப்பட்டிணத்திற்கு மாற்றப்பட்டு விட்டது என்று அறிகிறோம். விசாகப்பட்டிணத்தில் உருக்காலை நிறுவப்படுவதை நான் ஆட்சேபிக்கவில்லை. சேலம் உருக்காலைத் திட்டத்தை முன்பு எந்த அளவில் உருவாக்கினோமோ அதே அளவில் செயல்படுத்த அரசாங்கம் முயற்சிக்கவேண்டும். அதைக் குறைந்த அளவில் குறைந்த அடிப்படையில் இல்லாமல் விரிவான அளவில் நிறைவேற்ற

விவசாயத் துறைக்கு 93 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. விவசாயத்திற்கு நிறையப் பணம் ஒதுக்கப்பட்டாலும், நாம் இந்தத் துறையில் தக்க பலனைப் பெற முடியவில்லை என்பதை இந்த அறிக்கையின் மூலமே நாம் அறிய முடிகிறது. இவ்வறிக்கையின் 7-வது பக்கத்தில் 15-வது பாராவில் "The rate of growth considered feasible for agricultural sector is somewhat lower than that assumed for the country as a whole in the memorandum on the Fourth Plan" என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதில் குறிப்பாகக் கவனிக்க வேண்டிய வார்த்தைகள் "is some what lower than that assumed for the country as a whole". என்பவை ஆகும். அதாவது, நம் மாநிலத்தில் ஏற்பட்டுள்ள அபிவிருத்தி, நம் நாட்டில் ஏற்பட்டுள்ள அபிவிருத்தியைவிடக் கொஞ்சம் குறைவாக இருக்கிறது என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. இந்த அபிவிருத்திக் குறைவுக்கு என்ன காரணம் என்று நாம் பார்க்க வேண்டும். இந்தப் போக்கு திருப்தியளிக்கக் கூடியது அல்ல. இந்தப் புத்தகத்தில் 17-வது பக்கத்தில் average yield per acre in lb. என்ற புள்ளிவிவரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதன்படி 1950-51-ஆம் வருஷத்தில் average yield of rice per acre 1,016 பவுண்டுகள். இது இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் ஆரம்பத்தில் இருந்த நிலை. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட முடிவில் இது 1,213 பவுண்டுகள் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. இதில் சுமார் 200 பவுண்டு அபிவிருத்தியை நாம் காண முடிகிறது. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட முடிவில் இது 1,261 என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. எனவே இரண்டாவது திட்ட முடிவில் 200 பவுண்டு அதிகரிப்பைக் காண்கிறோம். மூன்றாவது திட்ட முடிவில் இதில் காணக்கூடிய அபிவிருத்தி 48 பவுண்டுகள்தான். இந்த அபிவிருத்திக் குறைவுக்கு அடிப்படைக் காரணம் என்ன என்று நாம் ஆராயவேண்டும். நம் திட்டத்தில் ஏதோ கோளாறு இருப்பதால் தான் எவ்வளவு பெரிய தொகை செலவழித்தாலும் தக்க பலன் பெற முடியவில்லை. இந்த அறிக்கையின் 6-ஆவது பக்கத்தில் "The state has reached the limit of utilisation of all its water resources and further expansion of irrigation facilities has become increasingly difficult" என்று குறிப்பிட்டிருக்கிறது. அதாவது, நமக்குக் கிடைக்கக்கூடிய எல்லாத் தண்ணீரையும் நாம் பெற்றுவிட்டோம், இனிமேல் தண்ணீர் பெறுவதற்கு வாய்ப்பு இல்லை என்று சொல்லப்பட்டிருக்கிறது. எனவே விவசாய உற்பத்தியை அதிகரிப்பதற்கு இனிமேல் உள்ள ஒரே வழி உரங்களை அதிகமாகப் பயன்படுத்துவது தான் என்று தோன்றுகிறது. 'மான்யூர்' சம்பந்தமாக ஒரு குறிப்பில் "The experience in the current plan has shown that ryots are reluctant to apply for chemical fertilisers in respect of dry crops, as they are not sure of the returns" என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது உரங்களை உபயோகித்தால் அதிகமான பலன் கிடைக்கும் என்ற நம்பிக்கை விவசாய மக்களுக்கு இல்லாததால் அதை அதிகமாகப் பயன்படுத்த அவர்கள் முற்படுவதில்லை என்று சொல்லப்பட்டிருக்

6th August 1965] *[திரு. கே. எஸ். அப்துல் வகாப்]*

*கிறது. இந்த நிலையில் விவசாயத்திற்காக 93 கோடி ரூபாய் செல வழித்தால் என்ன பலனைக் காணப்போகிறோம்? சென்ற ஐந்தாண்டுத் திட்டத்தில் அரசாங்கம் விவசாயத்திற்காக 56 கோடி ரூபாய் ஒதுக்கியது. இவ்வளவு ரூபாய் செலவழித்ததில் நமக்கு திருப்திகாமான பலன் கிடைக்கவில்லை. இப்போது விவசாயத்திற் காக ஒதுக்கும் ரூ. 93 கோடியில் 50 கோடி ரூபாயைக் கழித்தால் மீதி ரூ 37 கோடி வருகிறது. விவசாயிகளுக்கு முன்பு அளித்த சௌகரியங்கள் அப்படியே இருக்கட்டும், அதற்கு செலவழிப்பது போக பாக்கி 37 கோடி ரூபாயில் அரசாங்கம் தன் சொந்தப் பொறுப்பிலேயே விவசாயத்தை துவக்க வேண்டும். அரசாங்கம் தரிசு நிலங்கள் உள்ள இடங்களில் வாய்க்கால்கள் மூலம் தண்ணீர் பாய்ச்ச வசதி செய்து, டிராக்டர்கள் மூலமும் மற்ற இயந்திரங்கள் மூலமும் பரந்த அளவில் விவசாயம் செய்ய வேண்டும், ஒன்றிரண்டு ஏக்கர்கள் அளவில் இல்லாமல் 200, 300 ஏக்கர்கள் அளவில், விரி வான அடிப்படையில், அரசாங்கம் விவசாயத் தொழிலை மேற் கொள்ள வேண்டும். அமெரிக்கா, இங்கிலாந்து ஆகிய தேசங்களுக்கு நம் கனம் தொழில் அமைச்சர் சென்று வந்திருக் கிறார். அந்த தேசங்களில் விவசாயம் இந்த முறையில் தான் நடக் கிறது. அதே மாதிரி, நாம் அரசாங்கப் பொறுப்பில் ஆட்களை நியமித்து விவசாயத் தொழிலை நடத்தினால் நாம் நல்ல பலனைக் காண முடியும்.*

*அடுத்து நான் சொல்ல முற்படுவது என்னவென்றால், தண்ணீர் நமக்கு போதிய அளவு இருக்க முடியாது என்ற கருத்துப்படச் சொன்னேன். அதைப் பார்க்கும் போது, தண்ணீருக்கு எப்படி வகை செய்வது என்று யோசிக்க வேண்டும். மழை பெய்து வெள் ளம் வரும்போது, அதிகத் தண்ணீர் வீணாகக் கடலில் போய்க் கலக்கிறது. நம் வசத்திலுள்ள டாம்களை இன்னும் உயரப்படுத்தி கூடுதலாக தண்ணீர் ஸ்டாக் செய்வதற்கு வகை செய்வதால் வருங் காலத்தில் நமக்கு கூடுதலாகத் தண்ணீர் கிடைக்கும் வாய்ப்பு ஏற்படும் என்று தெரிவித்துக் கொள்கிறேன்.* 5-20 p.m.

*அடுத்து இந்த அறிக்கையிலே 9-வது பக்கத்திலே உள்ள ஒரு விஷயத்தை நான் கவனத்துக்குக் கொண்டு வர விரும்புகிறேன்.*
" . . . . . . it will also be our endeavour in the Fourth Plan to increase the sense of opportunity of the relatively weaker sections of the population, particularly in rural areas" *பிற்பட்ட வகுப்பார்களை உயர்த்துவதிலே அரசாங்கம் தனிப்பட்ட கவனம் செலுத்தும் என்ற வாசகம் கண்டு நான் மகிழ்வு அடை கிறேன். இந்த அடிப்படையிலே ஹரிஜனங்களுக்கு நல்ல உதவி கள் செய்து அவர்கள் முன்னேற்றம் அடைய வகை செய்வதைப் பற்றி நான் முன்பும் பாராட்டியிருக்கிறேன். மறுபடியும் என் பாராட்டுதலைத் தெரிவித்துக் கொள்கிறேன். இன்றைக்கு தமிழ் நாட்டைப் பொருத்தமட்டில் ஹரிஜனங்கள் நல்ல நிலைக்கு முன்னேறி விட்டார்கள். தமிழ் நாட்டில் இன்றைக்கு பிற்பட்ட வர்களாக பின் தங்கியிருக்கக் கூடியவர்களாக, பொருளாதார*

[திரு. கே. எஸ். அப்துல் வகாப்] [6th August 1965

அடிப்படையிலே பின் தங்கியிருக்கிற சமுதாயம், முஸ்லீம்கள் சமுதாயம். அவர்களுக்கு தனிச் சலுகைகள் கொடுத்து உயர்த்த வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். குறிப்பாக, அவர்களில் உருது பேசுகிறவர்கள் உருது பேசாதவர்கள் என்ற பாகுபாடு இல்லாமல், எல்லா முஸ்லீம்களுக்கும் "most backward community' என்று அறிவித்து, ஹரிஜனங்களுக்கு எந்தெந்த சலுகைகள் அளிக்கப்படுகிறதோ, அந்தச் சலுகைகள் எல்லாமே முஸ்லீம் களுக்கும் அளிக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். கடைசி யாக இந்தத் திட்டத்திலே மூன்று மருத்துவக் கல்லூரிகள் துவக் கப்படுவதாக அறிவிக்கப்பட்டிருக்கிறது. இந்த மருத்துவக் கல்லூரிகளிலே ஒன்று திருச்சியிலேயும், மற்றொன்று கோயமுத் தூரிலேயும், மற்றொன்று சேலத்திலேயும் அமைத்தால், அது பொருத்தமாக இருக்கும் என்ற என் அபிப்பிராயத்தைத் தெரி வித்துக் கொண்டு, திருச்சி மாவட்டத்தில் முசிரிக்கும் குளித்தலைக் கும் நடுவில் ஒரு பாலம் கட்டுவது நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டு, அதை அமுல் படுத்த முற் பட வேண்டுமென்று கேட்டுக் கொண்டு என் பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

* **திரு. எம். சங்காலிங்கம் பிள்ளை :** கனம் தலைவர் அவர்களே, நான்காவது ஐந்தாண்டுத் திட்ட முதல் குறிப்பு நம் முன் ஆராய வைக்கப் பட்டுள்ளது. அதனுள் நுழைந்து ஆராய்வதற்கு முன்னால், இன்றிருக்கக்கூடிய நெருக்கடியின் காரணமாக இந்தத் திட்டத்துக்கே ஓய்வு ஒரு ஆண்டு அல்லது ஒரு சில ஆண்டுகள் கொடுக்க வேண்டும் என்ற கருத்தும் நிலவுவதை அறிகிறோம். ஆனால், என்னைப் பொறுத்த அளவில் அதற்கு ஓய்வு கொடுக்க வேண்டிய தேவையில்லை. ஏனென்றால், முதல் மூன்று ஐந்தாண்டுத் திட்டங்களிலேயும் நாம் எதைச் செய்ய முடியுமோ அதைச் செய்து, செய்ய முடியாததை மறு ஐந்தாண்டுகளில் கொண்டு வந் தது போல், நம் நாட்டுக்கு இன்றியமையாத அபிவிருத்தி திட்டங் கள் இவை, வருவாய் நிலை இது, இன்னும் ஏற்றுக் கொள்ள வேண் டிய நிதிநிலை இவ்வாறு, என்று திட்டம் அமைக்கிறோம். அன்றைய சூழ்நிலைக்கேற்ப முன் செய்ய வேண்டியதை முன் செய்து, மற்ற திட்டங்களுக்கு மாற்ற வேண்டியதை மாற்றி வந்திருக்கிறோம். அந்த அளவிலே இந்தத் திட்டம் விரைந்து செயல் படவேண்டியது இன்றியமையாத நிலை என்று கூறுகிறேன். இந்தத் திட்டத்திலே நிதியைப் பற்றிக் கூறும்போது, பெரும் அளவு நம் நிதியில் செய்ய வேண்டுமென்ற நிலை வற்புறுத்தப்பட்டு இருப்பதால், தற்கு சிறு சேமிப்பு திட்டங்கள் எல்லாம் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. இந்த சிறு சேமிப்பு திட்டங்களில் குறைந்த வருவாய் உள்ளவர்களுக் கெல்லாம் அதிகத் தொல்லை கொடுக்காமல் நிரம்ப வருவாய் உள்ள வர்கள், முதலாளிகள், பக்கத்தில் திரும்பி நிற்க வேண்டு மென்று நான் அரசினரைக் கேட்டுக் கொள்கிறேன். குறைந்த வருவாய் என்று கூறும்போது, மாதம் 200 ரூபாய்க்குள்ளாக, அலவன்ஸ் எல்லாம் சேர்த்து, வருவாய் உள்ளவர்களுக்கு சிறு சேமிப்புத் திட்டம் மூலமாக திட்டத்துக்கு அதிக பணம் சேர்க்கிற நிலையில் தொல்லை இல்லாமல் செய்ய வேண்டும். அவர்களுடைய பிராவி

6th August 1965] [திரு. எம். சங்கரலிங்கம் பிள்ளை]

டெண்ட் பண்டு, மற்ற பல சிறு சேமிப்புகளை எல்லாம் திட்டத்துக்காக பயன்படுத்துகிறோம். இப்போது தேசீய நெருக்கடியின் காரணமாக அடிஷனல் பிராவிடண்ட் பண்டு என்று கூடுதல் நிதி பிடித்து வருகிறோம். ரூபாய் 200-க்கு குறைந்த மாத வருவாய் உள்ளவர்களுக்கு, அதிலிருந்து ஓரளவுக்கு விதிவிலக்கு அளித்து, அவர்களுக்குத் தொல்லை இல்லாமல் செய்து, பெரும் வருவாய் உள்ளவர்கள் பக்கத்தில் நாம் திரும்ப வேண்டுமென்று நான் வற்புறுத்த ஆசைப்படுகிறேன்.

அடுத்தாற்போல நமது திட்டத்தில் வேளாண்மைக்கு முதல் இடம் கொடுத்து உணவு உற்பத்தி முதலாவதாக சொல்லப்பட்டிருக்கிறது. மூன்று திட்டங்களிலேயும் அதற்கு முதன்மை கொடுத்திருக்கிறோம். ஆனாலும் இன்று வேளாண்மைத் துறையில், நாம் எதிர்பார்த்த அளவு அல்லது முன்னேறி இருக்க வேண்டிய அளவு, முன்னேறவில்லை என்பது தெளிவு. வேளாண்மையில் முன்னேறியிருக்கலாம்; ஆனால், உணவு உற்பத்தியில் முன்னேறவில்லை என்று உறுதியாகச் சொல்ல ஆசைப்படுகிறேன். ஏனென்றால், இன்று நம் நாட்டில் இருக்கிற உணவு நிலை அதை நமக்கு எடுத்துக் காட்டுகிறது. அதற்கான காரணத்தைப் பற்றி ஆராயும்போது, இந்த மன்றத்தில் மதிப்புக்குரிய உறுப்பினர்களில் சிலர் நிலச் சீர்திருத்தச் சட்டம் அதற்குக் காரணமாயிருக்கிறது என்று கூறினார்கள். என்னுடைய கருத்து அதற்கு நேர்மாறானது. நிலச் சீர்திருத்தம் செய்து, உச்ச வரம்பை நிர்ணயம் செய்ததால் அல்ல, அதை அமுல் நடத்துவதில் காலம் தாழ்த்துவதால் தான் ஏற்படுகிறது என்று கருதுகிறேன். நிலச் சீர்திருத்தச் சட்டம் அமுல் நடத்தப் பட்டு, 30 ஏக்கருக்கு மேல் அதிகமாக இருந்தால், அந்த நிலங்களை எடுத்து பயிர் செய்கிறவர்களுக்கு, உண்மையில் நிலத்தில் உழுகிறவர்களுக்கு அளித்து, உரிமைப்படுத்திக் கொடுத்து வாய்ப்பு அளித்தால், உற்பத்தி பெருகியிருக்கும் என்பது என் திட்டம். ஆனால் நிலச் சீர்திருத்தச் சட்டம் 1960-ல் அமுலுக்கு வருகிறது என்று முன்னாலேயே சொல்லி, பெரும் நிலச்சுவான்தார்கள் தங்கள் நெல் விவசாய நிலத்தை வேறு பல விவசாயங்களுக்கு மாற்றி, கரும்பு சாகுபடி, மேய்ச்சல் தரை என்று மாற்றி, அந்தச் சட்டத்திலே இருந்து தப்பித்துக் கொள்ள வாய்ப்பு அளித்து விட்டோம் என்ற எண்ணம் தான் என்னைப் பற்றிக் கொள்கிறது. எனவே நிலச் சீர்திருத்தத்தை மிக விரைவில் அமுல் நடத்த வேண்டும், உச்ச வரம்பு போக, மிச்சம் இருக்கிற நிலத்தை விவசாயிகளுக்கு அளிப்பதிலே காலதாமதம் செய்யலாகாது என்று நம் அரசினரை வற்புறுத்திக் கேட்டுக் கொள்ள ஆசைப்படுகிறேன். குறிப்பாக நம்முடைய இன்றைய நில உச்ச வரம்பு சட்டம் எப்படி அமைந்திருக்கிறது என்றால், எஞ்சிய நிலங்கள் என்று எடுத்ததை எந்த விதமாகப் பயன்படுத்த வேண்டும் என்று அதில் சொல்லப் படவில்லை. மிஞ்சியிருக்கிற நிலங்கள் பற்றி அறிவிக்கப்படுகிறது அரசாங்கப்பதிவேட்டில் அல்லது கெஜட்டில். அது விவசாயிகளுக்கு உரிமையாக்கிக் கொடுக்கப்படுமா, இந்த அரசாங்கம் நிலச்சுவான்தார்களுக்குக் கொடுக்கிற நஷ்ட ஈட்டை பல தவணைகளாக விவசாயிகளிடமிருந்து வாங்கிக் கொண்டு நிலத்தை அவர்களுக்கு

சொந்தமாக்குமா என்றெல்லாம் சொல்லவில்லை. பயிரிடுகிறவர் 5 ஏக்கராவுக்கு மேல் வைக்கக்கூடாது என்று உச்ச வரம்பு வைத்தி
5-30 p.m. ருக்கிறோம். நில சொந்தக்காரன் 30 ஏக்கருக்கு மேல் வைத்துக் கொள்ளக் கூடாது என்ற உச்ச வரம்பின் படி மிஞ்சிய நிலம் எவ்வளவு என்று அறிவித்துவிட்டோம். அந்த நிலத்தை பயிரிடும் விவசாயிக்கு அது சொந்தமாக நிலச்சுவான்தார்களுக்குக் கொடுக்கிற நஷ்ட ஈட்டை அந்தந்த விவசாயிகளிடமிருந்து பல தவணைகளாக வாங்கி கொடுத்து, விவசாயிக்கு நிலத்தை உரிமைப்படுத்திவிட்டால் ஊக்கமாக உணவு உற்பத்தியில் ஈடுபடுவார்கள் என்பது என்னுடைய நம்பிக்கை. பல நிலங்கள் கரும்பு சாகுபடிக்கும் மேய்ச்சல் தரைக்கும் மாற்றப்பட்டிருக்கின்றன. 1950-க்கு பின்னால் அவை மாறியதால் சட்டத்தில் இதற்கு விலக்கு அளிக்காமல் அதுவும் நெல் சாகுபடி நிலம் என்று கருதி உச்ச வரம்புக்கு உட்படுத்தவேண்டுமென்று சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். மேலும் நெல் விவசாயம்தான் மிக முக்கியமானது. வேளாண்மையை நாம் முக்கியமாகக் கருதுகிறோம். உணவு உற்பத்திக்கு முக்கிய இடம் கொடுக்கவேண்டிய நேரம் இது. மண்வள ஆராய்ச்சியில் மிகவும் ஈடுபட்டு ஒவ்வொரு தாலுகா வாரியாக அரசினர் ஆட்களை அனுப்பி மண் வளத்தை ஆராய்ந்து கரும்புக்கு ஏற்றது, நெல்லுக்கு ஏற்றது எது எது என்று பகுத்து விவசாயிகளுக்கு வழிகாட்டவேண்டும். 'சாயில் கன்சர்வேஷன்' எல்லாம் வைத்திருக்கிறார்கள். நாம் மண்ணை எடுத்து அனுப்பினால் அவர்கள் பார்ப்பார்கள். எல்லா விவசாயிகளும் இந்த நடைமுறை தெரிந்தவர்களல்ல. ஆங்காங்கு உள்ள பஞ்சாயத்து யூனியன்களில் உள்ள விவசாய விஸ்தரிப்பு அதிகாரி எதை விஸ்தரிக்கிறாரோ, தெரியவில்லை. ஆனால் விவசாயத்தை அல்ல. ஆகையால் அரசினர் முதல் கடமையாக நெல் விவசாயத்திற்கு ஏற்ற இடம் எது என்று பரிசோதனை செய்யவேண்டும். நெல் விவசாயத்தில் நானும் ஈடுபட்டிருப்பதால் அதைப்பற்றி என்னால் உணரமுடிகிறது. இப்போது நெல் விவசாயத்தில் ஈடுபட்டுக்கொண்டிருந்தவர்கள் எல்லாம் வியாபாரப் பொருள்களை விவசாயம் செய்யப் போய்க்கொண்டிருக்கிறார்கள். அதில்தான் அவனுக்கு அதிகமான பொருள் கிடைக்கிறது. அதனால் வாழ முடிகிறது. நாட்டுக்கு நெல் கொடுக்கவேண்டுமென்ற உணர்ச்சியில் அவன் நெல் விவசாயம் செய்தால் வாழ முடியாத நிலை இன்று இருக்கிறது. அதை தடை செய்யவேண்டும். நெல் விவசாயத்திற்கான இடங்களை ஆராய்ந்து எந்த இடத்தில் நெல் பயிர் செய்ய முடியுமோ அந்த இடங்களில் நெல்லைத் தவிர எந்த வியாபாரப் பொருள்களையும் விவசாயம் செய்வது தடை செய்யப்படவேண்டும். அப்படிச் செய்யும்போது விவசாயிகள் வாழ்வதா, வேண்டாமா என்ற பிரச்னை வருகிறது. நெல் விவசாயம்தான் செய்ய வேண்டுமென்றால் அதைச் செய்பவன் பிச்சைக்காரனாகும் நிலைதான் ஏற்படுகிறது. வருமானத்தைப் பெருக்கிக்கொள்ள வேண்டுமென்றால் வியாபாரப் பொருள் விவசாயம் தான் செய்ய வேண்டும். அதனால் நெல் விவசாயத்திற்கு அதிக ஊக்கமும் சலுகையும் அளிக்கவேண்டியது அவசியமாகிறது. ஆனால் அரசாங்கத்தில் நெல் விவசாயத்திற்குத்தான் ஃபைன் போட்டுக்

கொண்டிருக்கிறோம். ஏக்கருக்கு 15 ரூபாய்க்கு மேல் வரிபோடுகிறோம், மற்ற விவசாயத்திற்கு அப்படியில்லை. சோளம், புகையிலை, கரும்பு, காப்பி இவைகளை உற்பத்தி செய்யும் விவசாயிகளுக்கு எந்த வரி இருக்கிறதோ அந்த அளவுக்கு குறைந்த வரியில்லை நெல் விவசாயத்திற்கு என்று சொல்ல ஆசைப்படுகிறேன். உடலுழைப்பால், வாழவேண்டுமென்ற எண்ணத்தில், எல்லோருக்கும் உணவளிக்க வேண்டுமென்ற தொண்டினுக்காக பரம்பரையாக செய்து வரும் தொழில் என்ற முறையில்தான் நெல் விவசாயத்தில் சிலர் ஈடுபட்டுக்கொண்டிருக்கிறார்கள். வியாபாரப் பொருள்களைப் பயிர் செய்வதற்கு நிறைய பொருள் தேவை. நெல் விவசாயம் என்றால் சாகப்போகிற மாட்டைக் கட்டி உழுது, யாரிடமாவது விதை கடன் வாங்கி நெல்லை விவசாயம் செய்யத் தொடங்கிவிடலாம். அந்த ஒன்றுதான் நெல் விவசாயத்தை செய்யத் தூண்டுகிறது. ஆனால் அந்த விவசாயி வாழ்கிறான் என்று சொல்வதற்கில்லை. நெல் விவசாயத்திற்கு விதித்திருக்கும் அதிக வரியை ரத்து செய்து அடிப்படை வரியாக அதை மாற்றவேண்டும். ஒரு ஏக்கருக்கு இரண்டு ரூபாய்க்கு மேல் இருக்கக்கூடாது. அமைச்சர் அவர்கள் சொல்லியதுபோல சுப்ரீம் கோர்ட்டில் இவ்வாறு வரி விதிப்பதை தடை செய்யப்பட்டிருக்கிறது. நிலத்திற்கு நிலம் வேற்றுமை பாராட்டாமல் நாம் ஒன்று போல வரி விதிக்கக்கூடாது என்று சொல்லப்பட்டிருக்கிறது. ரப்பர் தோட்டத்திற்கு குறைந்த வரியிருக்கிறது. அதேபோல் புகையிலை, காப்பிக்கு குறைந்த வரி இருக்கிறது. அதைப்போன்று நெல்லுக்கும் குறைக்கவேண்டும். ஒரே அடிப்படையாக நாடு முழுமைக்கும் தீர்மான வரியாக இரண்டு ரூபாயாக வைக்கமுடியாதே தவிர வேறில்லை. வருவாய்க்குத் தக்க வித்தியாசம் இருக்கலாம். எனவே வியாபாரப் பொருள் விவசாயத்திற்கு கூடுதலும், நெல் விவசாயத்துக்கு குறைவாயும் வரி விதிக்க வேண்டும். அப்படியும் சட்டம் இடம் கொடுக்கவில்லை என்றால் சட்டத்தைத் திருத்த அரசாங்கம் முன்னுக்கு நின்று இதில் முனையவேண்டுமென்று கேட்டுகொள்கிறேன். குறிப்பாக கன்னியாகுமரி மாவட்டத்தில் அரசாங்கமே ரப்பர் எஸ்டேட் எடுத்திருக்கிறார்கள். அதற்காக பல தரிசு நிலங்கள் கையில் வைத்திருக்கிறார்கள். அதை ஆரம்பிக்க பல நாட்களாகும். அது வரையில் குத்தகைக்குக் கொடுக்கிறார்கள். அப்படிக் கொடுக்கப் படும் விவசாயிகளிடத்தில் நான்கில் ஒரு பகுதியைப் பருத்தி பயிர் செய்யவேண்டுமென்று வற்புறுத்துகிறார்கள். கன்னியாகுமரி மாவட்டத்தில் பருத்தி பயிர் செய்தால் என்னவாகும்? மழை மிகுதியான இடம். மண்ணும் அதற்கேற்ப இல்லை. பருத்திக்கு பதிலாக மரச்சீனி பயிர்செய்தால் உணவு உற்பத்தி பெருகும் அல்லது மற்ற பொருத்தமான விவசாயத்தை போடுங்கள் என்றால் சட்டம் அப்படியில்லை என்று சொல்கிறார்கள். சூழ்நிலைகளுக்கேற்ப விவசாயத்தை மாற்றிக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தில் உணவு உற்பத்திக்கு முக்கியத்துவம் கொடுப்பதால் பல விவசாயக் கல்லூரிகள் ஏற்படுத்தவேண்டும். கன்னியாகுமரியில் நெல் பயிர் உற்பத்தி அதிகமாகச் செய்கிறோம். 60, 70 ஆயிரம் ஏக்கர் அங்கு

நெல் பயிர் செய்யப்படுகிறது. மிகுந்த பணச் செலவில்லாமல் கல்லூரி ஏற்படுத்த வசதியிருக்கிறது. முன்னாள் திருவாங்கூர் அரசு விட்டுச்சென்ற, பத்மநாபபுரத்தில், உதயகிரி கோட்டை இருக்கிறது. நான்கு பக்கமும் சுவர்களால் கட்டப்பட்டு 146 ஏக்கர் விளைகக் கிடக்கிறது. அது அரசாங்கத்திற்குச் சொந்தமானது. இரண்டு அரசாங்கத்திற்கும் அதுபற்றி சிறு வழக்கு இருப்பதாகக் கேள்விப்படுகிறேன். அதைத் தீர்த்துக்கொள்ளலாம். அந்த இடத்தை எடுத்து அதில் விவசாயக் கல்லூரி ஏற்படுத்தவேண்டு மென்று கேட்டுக் கொள்கிறேன்.

நமது மாநிலத் துறையைப் பற்றிச் சொன்னேன். மத்தியத் துறையைப்பற்றி என்னென்ன செய்யப்படுகிறது என்பது நமக்கு அறிவிக்கப்படவில்லை. மாநில அரசாங்கம் மத்தியத் துறையிலே என்னென்ன நமக்கு செய்யவேண்டுமோ அதை வன்மையோடு எடுத்துச் சொல்வார்கள் என்ற நம்பிக்கை நமக்கு உண்டு. கன்னி யாகுமரி மாவட்டத்தில் இதுவரையில் ரயில் இல்லை. தமிழ் மாநி லத்திலேயே ஒரு மாவட்டம் ஒரு இஞ்சு கூட ரயில்பாதை இல்லாத மாவட்டம் கன்னியாகுமரிதான். ரயில் பார்ப்பதற்கென்று பள்ளிப் பிள்ளைகளை திருநெல்வேலி வரையில் கொண்டு சென்று காட்டக்கூடிய நிலையில் அந்த மாவட்டம் இருக்கிறது என்பதை சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். நீலத்திரைக்கடல் ஓரத்தில் அமைந்த குமரிமுனையிலிருந்து இமயம் வரையில் யாரும் சென்று வர ரயில்பாதை அமைத்தாகவேண்டும். அங்கு அமைப்பதால் பணம் வருமா என்று பார்க்காமல் கன்னியாகுமரி முதல் காஷ்மீர் வரையில் பாதை அமைக்கவேண்டுமென்று சொல்கிறோம். ஆகை யால் அந்த மாவட்டத்திற்கு ரயில் திட்டத்தை விஸ்தரிக்க வேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன்.

சிமிண்டு உற்பத்தி பற்றி பேசினார்கள். எங்கள் பகுதிகளில் சிமிண்டு உற்பத்திக்கான சுண்ணும்புக் கற்கள் அதிகமாகக் கிடைக் கின்றன. வட்டக் கோட்டையில் சுண்ணும்பு மிகுதியாக இருக் கிறது. திட்டம் பரிசீலனை செய்யப்பட்டு அரசியல் துறையிலோ கூட்டுறவுத் துறையிலோ கன்னியாகுமரி மாவட்டத்தில் சிமிண்டு தொழிற்சாலையை அரசினர் அமைத்துக்கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

குடும்பக் கட்டுப்பாடு இன்றியமையாத ஒன்று. பலருக்கு அது பற்றி மாறுபட்ட கருத்துக்கள் இருக்கலாம். மதிப்பிற்குரிய கனம் அங்கத்தினர்கள்கூட சொன்னார்கள், குடும்பக் கட்டுப்பாடு 60 ஆண்டுகளுக்கு முன்பு வந்திருந்தால் நான் வந்திருக்கமாட்டேன் என்று இருக்கலாம். இன்றைய நிலையில் குடும்பக் கட்டுப்பாடு திட்டம் கொண்டுவராவிட்டால் மக்கள் மிகுந்த துன்பம் அனுப விக்க வேண்டி வரும் என்பதில் ஐயமில்லை. முதலில் பணம் கொடுத்து பிறரை அழைத்து அறுவை சிகிச்சை செய்வதோடுகூட தெருவிலே அலைந்து திரியும் பிச்சைக்காரர்களை அழைத்து கட்டா யமாக இருபாலர்களுக்கும் குடும்பக் கட்டுப்பாடுத் திட்டத்தில் அறுவை சிகிச்சை செய்து கையில் இருபது ரூபாயையும்

6th August 1965] [திரு. எம். சங்கலிங்கம் பிள்ளை]

கொடுத்து அனுப்பவேண்டும். அப்படிச் செய்தால் தான் இனி வருகின்ற பிச்சைக்கார பரம்பரை குறையும். பிச்சைக்காரன் மகன் பிச்சைக்காரனுக பிறக்காமல் இருப்பான். கொடுக்கின்ற பணமும் அவனுக்கு இருபது நாள் பிச்சை எடுக்காமல் காலம் கழிக்க உதவும். ஆகையால் அந்த செயலுக்கு முதலிடம் கொடுக்க வேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன். கன்னியாகுமரி மாவட்டத்தில் தீவிர சாகுபடித் திட்டத்தை அமல் நடத்த வேண்டும் என்று அரசாங்கத்தாரை வேண்டிக் கேட்டுக்கொள்கிறேன். அது சிறு மாவட்டம். அங்கே 60,000 ஏக்கர் நிலங்கள் இருக்கின்றன. சர்க்கார் பல மாவட்டங்களில் இந்தத் திட்டத்தைச் செயல்படுத்தியிருக்கின்றனர். கன்னியாகுமரி மாவட்டத்தில் தீவிர சாகுபடித் திட்டத்தைக் கொண்டுவந்தால் விவசாய உற்பத்தி பெருக அது மிகவும் உதவும். திட்டங்களை நிறைவேற்றத் தேவையான பணத்தை பெறும் விஷயத்தில் மக்களை அதிகத் தொல்லைக்கு உட்படுத்தாதபடி சர்க்கார் செயலாற்ற வேண்டும். சக்தியுள்ளவர்களிடமிருந்து பணத்தைப் பிடுங்கிக்கொள்ளலாம். பணம் அதிகமாக இல்லாதவர்கள் கஷ்டப்படாதபடி பார்த்துக்கொள்ள வேண்டும். அரசாங்கத்தார் செலவழிக்கும் பணம் பாழாகாமல் இருப்பதற்கு மக்களும் அரசாங்கத்தாருடன் ஒத்துழைக்க வேண்டும். என்ஜினியர் தப்பு செய்தால் அவருக்கு கனம் அங்கத்தினர்கள் ஆதரவு அளிக்கக் கூடாது. என்ஜினியர் தப்பு செய்தால் அதை அரசினரும் மறைத்துவிடக்கூடாது. அவர்கள் நம் உறவினர்களாக இருந்தாலும் நாமும் அவர்களுக்கு துணை நிற்கக் கூடாது. அப்படி எல்லோரும் ஒத்துழைத்தால் திட்டம் நல்ல முறையில் நிறைவேறும், நாம் வெற்றி பெறுவோம். திட்டங்களை நல்ல முறையில் நிறைவேற்ற முயற்சிக்க வேண்டும் என்று அரசாங்கத்தைக் கேட்டுக் கொண்டு என் உரையை முடிக்கிறேன். 5-40 p.m.

திரு. கே. கமலக்கண்ணன் : கனம் தலைவர் அவர்களே, நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தின் பேரில் சில வார்த்தைகள் பேச விரும்புகிறேன். நம் அரசாங்கம் முதல் மூன்று ஐந்தாண்டுத் திட்டங்களில் வேளாண்மை, சுகாதாரம், கல்வி, தொழில், மின்சாரம், சமூகப் பணிகள் ஆகியவைகளுக்கு முக்கியத்துவம் கொடுத்து, சமதர்ம சமுதாய அடிப்படையில் மக்கள் வாழ்க்கை நிலை உயர கணிசமான தொகை ஒதுக்கி, பணத்தை சிக்கனமாகச் செலவழித்தது. நாம் இன்று மகிழ்ச்சியுடன் முன்னேற்றப் பாதையில் சென்றுகொண்டிருக்கிறோம். "சமன் செய்து சீர்தூக்குங் கோல் போல் அமைந்தொரு பாற் கோடாமை சான்றோர்க்கணி" என்பது திருவள்ளுவரின் திருவாக்கு. நம் அரசாங்கம் இக்குறளுக்கிணங்க மக்களுக்கு பாரபட்சமின்றி சேவை செய்தாலும்கூட மக்களுக்கு சில குறைகள் இருந்துகொண்டுதான் இருக்கின்றன. ஒவ்வொரு கனம் அங்கத்தினரும் விவசாயத்திற்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டும் என்று சொல்லி பல கருத்துக்களைத் தெரிவித்திருக்கிறார்கள். சர்க்காருக்கு 45 சத விகித வருவாய் விவசாயத் துறையிலிருந்தே வருவதாகத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. இப்போது நம் நாட்டில் உள்ள நிலத்தில் ஒவ்வொருவருக்கும் சராசரியாக 0.98 சதவிகித நிலம் இருக்கிறது; நம் தமிழ்நாட்டில்

[திரு. கே. கமலக்கண்ணன்] [6th August 1965

அதை விடக் குறைவாக, 0.61 சதவிகிதம் இருப்பதாகத் தெரிகிறது. நம்முடைய அரிசி விளைச்சல் 1950-51-ல் ஏக்கருக்கு 1,016 பவுண்டு, 1955-56-ல் ஏக்கருக்கு 1,213 பவுண்டு, 1960-61-ல் ஏக்கருக்கு 1,261 பவுண்டு. அமெரிக்காவில் ஒரு சாதாரண, சிறு குடும்பத்தை எடுத்துக்கொண்டால், அக்குடும்பத்திலுள்ள நான்கு, ஐந்து பேர் விஞ்ஞான முறையில், நவீன முறையில், 300 அல்ல 400 ஏக்கர் விவசாயம் செய்து ஒரு பட்டணத்திற்கே உணவுப் பொருள்கள் ஸப்ளை செய்கிறார்கள். அமெரிக்காவில் ஏக்கருக்கு 5,000 முதல் 6,000 பவுண்டு வரை விளைகிறது. இன்று தமிழ் நாட்டில் உழவர்களின் அன்றாடக் கூலியானது, இந்தியாவில் உள்ள சராசரிக் கூலியைவிட மிகக் குறைவாக இருக்கிறது. இந்த ராஜ்யத்தில் சாதாரணமாக 10 பேர் உள்ள, அரை அல்லது ஒரு ஏக்கர் நிலம் உடைய குடும்பத்தினர் தினத்திற்கு ஒரு வேளைச் சாப்பாட்டுக்குக்கூட வழியில்லாமல் இருக்கிறார்கள். அவர்களுடைய கூலி தினத்திற்கு 12 அணா அல்லது ஒரு ரூபாய்க்கு மேற்பட்டதாக இல்லை. அவர்கள் விவசாயத்தில் நல்ல அனுபவம் உள்ளவர்களாக இருந்தாலும் வயிறும் முதுகும் ஒட்டியிருப்பதால் நகரத்திற்கு வந்துவிடுகிறார்கள்; வேறு தொழில்களுக்கு வந்துவிடுகிறார்கள். இப்பேர்பட்டவர்களுடைய கூலிகளை உயர்த்த அரசாங்கம் ஆவன செய்தால் நன்றாக இருக்கும் என்பது என் தாழ்மையான அபிப்பிராயம். சிறு டிராக்டர்களை உற்பத்தி செய்து, ஒன்று அல்லது அரை ஏக்கராக இல்லாமல் 10 அல்லது 15 ஏக்கர் நிலங்கள் உடைய விவசாயிகளில் ஏராளமான விவசாயிகளுக்கு அவைகளைக் கொடுத்தால் விவசாய உற்பத்தி பெருகும். பட்டணங்களிலுள்ள டாக்டர்கள், எஞ்ஜினியர்கள் முதலியவர்களும் மற்றவர்களும் கிராம மக்களுடன் தொடர்பு கொண்டு அவர்களுக்கு சேவை செய்ய வேண்டும் என்று மகாத்மா காந்தியடிகள் சொன்னார். நாம் ஓரளவு அந்த முறையில் செயலாற்ற வேண்டும்.

விவசாயத்தில் அனுபவமில்லாத ஒருவர் ஒரு கிராமத்திற்குச் சென்றார். அங்கே ஒரு விளம்பர போர்டில் "விவசாயத்தில் ஒன்றுக்கு ஒன்பது லாபம்" என்று எழுதப்பட்டிருந்ததைப் பார்த்தார். உடனே அவர் ஒரு சூபர்வைஸரை நியமித்து 50,000 ரூபாய் செலவழித்து விவசாயம் செய்தார். கடைசியில் அவருக்கு 10,000 ரூபாய்க்குத் தான் பலன் கிடைத்தது, 40,000 ரூபாய் நஷ்டம் ஏற்பட்டது. உடனே அவர் மறுபடியும் அந்த போர்டைப் பார்க்கச் சென்றார். "நேரிடையாகப் பார்த்தால் விவசாயத்தில் ஒன்றுக்கு ஒன்பது லாபம்" என்று அந்த போர்டில் கீழே எழுதியிருந்தது. அதே போல, இன்று நேரிடையாக விவசாயம் செய்பவர்களுக்குத்தான் லாபம் வருகிறது. இதை நான் அனுபவ பூர்வமாக அறிந்திருக்கிறேன். எனவே விவசாயத்தில் ஈடுபடும் விவசாயிகளுக்கு அரசாங்கம் பல துறைகளில் தனிச் சலுகைகள் கொடுக்கவேண்டும்.

இப்போது பூமிக்குள் இருக்கும் தண்ணீரை விஞ்ஞான முறையில் வெளியே கொண்டுவந்து விவசாயத்திற்கும் மற்றக் காரியங்களுக்கும் உபயோகிக்கிறோம். இன்னும் 56 ஆண்டுகளுக்குப் பிறகு

6th August 1965] [திரு. கே. கமலக்கண்ணன்]

இந்தத் தண்ணீர் வற்றிவிடும் என்று ஒரு விஞ்ஞானி கூறியிருப்பதாக ஏதோ ஒரு அறிக்கையில் பார்த்தேன். அவ்வாறு அந்தத் தண்ணீர் வற்றிவிடும்போது உலகத்தில் தண்ணீரில்லாப் பஞ்சம் ஏற்படும் என்று அந்த விஞ்ஞானி கூறியிருக்கிறார். எனவே, குடிப்பதற்கும், விவசாயம் செய்வதற்கும், மற்ற காரியங்களுக்கும் சமுத்திர நீரை தகுதியுள்ளதாக ஆக்குவதில் ஆராய்ச்சி செய்தால் நலமாக இருக்கும் என்று இந்த சந்தர்ப்பத்தில் சொல்லிக்கொள்கிறேன்.

சுகாதாரத்தை எடுத்துக்கொண்டால், தொத்துநோய்களைக் கட்டுப்படுத்த இப்போது பல மருந்துகள் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன. இதன் காரணமாக மக்களிடையே நல்ல சுகாதார நிலை இருந்து வருகிறது. 1941-ஆம் ஆண்டில் பிறப்பு 34.7 சதவிகிதமாகவும், இறப்பு 23 சதவிகிதமாகவும், சராசரி வயது 35 ஆகவும் இருந்தன. 1961-ஆம் ஆண்டில் பிறப்பு 26 சதவிகிதமாகவும், இறப்பு 13.3 சதவிகிதமாகவும், சராசரி வயது 41 ஆகவும் ஆகியிருக்கிறது. நாம் எல்லாத் துறைகளிலும் நன்றாக முன்னேறியிருக்கிறோம் என்பதை இதன் வாயிலாக அறிகிறோம். 5-50 p.m.

முதியோர் பென்ஷன் திட்டத்தில் அரசாங்கம் எத்தனையோ பேருக்கு உதவி செய்திருக்கிறது. இப்போது சில கிராமங்களில், சில பெரியவர்கள் திக்கற்றவர்களாகவும் எந்த விதமான வருமானமும் இல்லாதவர்களாகவும் இருக்கிறார்கள். அவர்கள் 50, 60 வயதுக்கு மேற்பட்டவர்களாக இருக்கிறார்கள். அவர்களுக்கெல்லாம் இந்தத் திட்டத்தைச் விஸ்தரித்தால் நன்றாக இருக்கும் என்று நினைக்கிறேன்

குடும்பக் கட்டுப்பாட்டு திட்டத்தைக் காணுகிறபோது நம்முடைய தமிழ் நாட்டிலே இன்றைக்கு ஒரு ஸ்குயர் மைலுக்கு 661 மக்கள் இருக்கிறதாகவும், இந்திய நாட்டின் சராசரியை எடுத்துக் கொண்டால், 373 பேர்கள் ஒரு ஸ்குயர் மைலுக்கு இருப்பதாகவும் கணக்கிட்டிருக்கிறார்கள். சாதாரணமாக இப்போது குடும்பக் கட்டுப்பாட்டை அனுசரிக்கிறவர்கள் எல்லாம் படித்தவர்கள், உயர்ந்த பண்பாடு உடையவர்கள்தானே தவிர, இந்து மதத்தைத் தவிர இதர மதத்தினர்—முகமதியர்கள், கிறிஸ்தவர்கள், தங்கள் மதம் அனுமதி தரவில்லை என்ற காரணத்தால் அனுசரிப்பதில்லை. அதோடுகூட, கிராமத்திலே இருக்கிற ஏழைகள் அனுசரிப்பதாகத் தெரியவில்லை. அந்த அளவுக்கு விளம்பரம் நம் நாட்டில் இல்லை. ஆகையினாலே, இந்து மதம் அல்லாத பிற மதத்தினர், கிராமத்திலே இருக்கிற ஏழைகள், இவர்களுடைய ஜனத்தொகை தான் அதிகரித்து வருகிறதே தவிர. நல்ல உயர்ந்த பண்பாடு உள்ள குடும்பங்கள் எல்லாம் குறைந்து கொண்டு வருமோ என்ற சந்தேகம்கூட எனக்கு இருக்கிறது. சென்னை நகரை எடுத்துக் கொண்டால், தண்ணீர்ப் பஞ்சம் அதிகமாக இருக்கிறது. ஜனத்தொகை அதிகரித்து வருகிற நிலையிலே, அது 22 லட்சமாகியிருக்கிறது. காவிரி நீர்த் திட்டத்தைக் கொண்டு வந்தால் மிக நன்றாக இருக்கும் என்று நினைக்கிறேன். வேண்டாத சில

ஸ்தாபனங்கள் சிறைச்சாலை, மிருகக் காட்சிசாலை, மெண்டல் ஹாஸ்பிடல் இப்படிப்பட்ட டிபார்ட்மெண்டுகள் எல்லாம் சென்னை நகர எல்லைக்கு அப்பால் கொண்டு போகப்பட்டால்கூட நல்லது, ஓரளவு ஜனநெருக்கடியைக் குறைக்க சந்தர்ப்பம் ஏற்படும் என்று சொல்லிக்கொள்கிறேன். இன்றைக்கு சென்னையிலே இருக்கிற பல ரோடுகளில் ஆக்ஸிடெண்டுகள் அதிகமாக ஏற்படுகின்றன. ஆடு மாடுகளும், லைசென்சு இல்லாத வாகனங்களும் குறுக்கே நெடுக்கே போவதுதான் இதற்குக் காரணம், பக்கிங்ஹாம் கால்வாய், கூவம் ஆறு முதலியவைகளில் வெயில் காலத்தில் நாற்றம் ஜாஸ்தியாக இருக்கிறது. அதற்கும் ஏதாவது வழிவகை செய்யவேண்டும். நகரில் பிச்சைக்காரர்கள், வியாதியஸ்தர்கள் தொல்லைகள் நிறைய இருக்கின்றன. எனக்கு முன்னால் பேசிய கனம் அங்கத்தினர்கள் சொல்லிய மாதிரி அதற்கு ஏதாவது வழிவகை செய்ய வேண்டுமென்று கூறிக்கொண்டு, இத்தோடு என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

திரு. எம். சுப்பையா செட்டியார் : மதிப்புக்குரிய தலைவர் அவர்களே இப்போது நம் முன் இருக்கும் நான்காவது திட்ட நகலை அனுசரித்து சில வார்த்தைகள் சொல்ல அனுமதி வேண்டுகிறேன். முதல் மந்திரி அவர்கள் படித்த அறிக்கையில்,

"The difficulties which we have had to face in the current Plan period, such as rise in prices and shortage of foreign exchange have naturally tended to dominate the debate on the Fourth Plan in its preparatory stage—The difficulties are real and cannot be slurred over". என்று விளக்கமாகச் சொல்லியிருக்கிறார்கள். இதை அனுசரித்து பல பிரமுகர்கள் சொல்லிக் கொண்டு வருகிறார்கள். இந்த ஐந்தாண்டுத் திட்டத்தைப் பற்றிச் சிந்திக்கும்போது, சில அபிப்பிராயங்களை எல்லாம் இந்த சபையில் பேசும் சந்தர்ப்பம் ஏற்பட்டது. அதற்காக ஒன்றிரண்டு வார்த்தைகள் சொல்ல வேண்டிய நிலையில் இருக்கிறேன். முதன்முதலாக ஒன்று சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். மூன்று ஐந்தாண்டு திட்டங்களின் வாயிலாக, விவசாயம், தொழில் மற்ற பல துறைகளிலேயும் தமிழ் நாட்டுக்கு நன்மை பயக்கும் காரியங்களைச் செய்ததற்காக தமிழ்நாடு அரசாங்கத்தைப் பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறோம். இருப்பினும், அதனால் ஏற்படுகிற அடிப்படைத் தீமைகளைப் பற்றி சிந்திக்க வேண்டிய நிலையில் இருக்கிறோம். இந்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் போடுவதற்கு, ஆரம்பிக்கும் முன்பு மதிப்புக்குரிய ராஜாஜி அவர்கள் சொன்னார்கள். செயல்படக் கூடிய அளவுக்கு இந்தத் திட்டத்தைப் போட வேண்டும். நாம் எவ்வளவு தூரம் அதைச் சாதிக்க முடியும், நம் மக்கள் அதை எவ்வளவு தூரம் அனுசரித்து பங்கு கொள்ள முடியும், மக்களுக்கு எவ்வளவு தூரம் பாரம் இல்லாமல் திட்டம் போட வேண்டுமென்று சிந்தித்துப் பார்க்கவேண்டுமென்று சொன்னார்கள்.

6th August 1965] [திரு. எம். சுப்பையா செட்டியார்]

ஞர்கள். இதைப் பற்றி தவறுதலாக திட்டமே தேவையில்லை என்று சொல்வதாகப் பிரசாரம் நடந்து வருகிறது. இன்று நாட்டின் நிலைமை எப்படி இருக்க வேண்டும்?

"Writing under the caption 'The Fading Rupee', the Eastern Economist (July 2) observed :

'It is, of course, just not true that the economy has collapsed or is due to do so. But it is certainly true that it is neither running smoothly, nor growing steadily. Its continued progress, in other words, cannot be taken for granted. This is not a subjective notion, but an objective assessment'.

Such is the state of our economy after near completion of three five-year plans; this is mainly because our plans are based on doctrinaire thinking and not on pragmatic considerations". அதாவது பயன் தரும் செயல் முறையில் திட்டங்களை வகுக்காத குறை, தத்துவார்த்த ரீதியில், ருஷ்யா, சீனு போன்ற அரசாங்கங்கள் செய்யும் திட்டங்கள் போல் போட்டு, மக்களுக்கு பலவித இன்னல்களை ஏற்படுத்தி இருக்கிறோம் என்று சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன். இதற்கு மாறாக ஜப்பான், ஜெர்மனி போன்ற நாடுகளில் சென்ற மகாயுத்தத்தில் கொடுமைகளுக்கு உள்ளான நாட்டு அரசாங்கங்களில் என்ன செய்திருக்கிறார்கள் என்று சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

"The myth that totalitarian methods are more effective in producing a higher and faster rate of economic growth than democratic process has been exploded by the economic miracle achieved by West Germany and the amazingly rapid economic recovery of Japan after the war. The gradual acceptance of Liberman's formula for the profit motive by Soviet Russia and other East European countries unmistakably indicates the superiority of liberalism over Marxism. Increased production can be brought about only by encouraging the enlightened self-interest among the idividual workers and the entrepreneurs.

இது தான் இன்றைக்கு இருக்கக்கூடிய சிந்தித்துப் பார்க்க வேண்டிய சந்தர்ப்பமாக இருக்கிறது.

**கனம் திரு. ஆர். வெங்கட்டராமன்:** ஒரே ஒரு வித்தியாசம் தான். அதெல்லாம் industrial revolution வந்தபோது develop ஆன Countries அது வந்த போது, நாம் தூங்கிக் கொண்டு இருந்தோம். அதனுல் தான் அந்த analogy ஒத்துக் கொள்கிறதில்லை ரொம்பப் பேர்கள்.

**திரு. எம். சுப்பையா செட்டியார்:** கனம் தொழில் துறை அமைச்சர் அவர்கள், ஜப்பானியர்கள், ஜெர்மனிக்காரர்கள் செய்த காரியம் நம் நாட்டுக்கு அவ்வளவு ஒத்துக் கொள்ளாது என்று சொல்கிறார்கள். ஆனுல் நடந்த பெரிய யுத்தத்தில் ஜப்பானும்

[திரு. எம். சுப்பையா செட்டியார்] [6th August 1965

அழிந்து விட்டது, ஜெர்மனியும் அழிந்து விட்டது. அந்த நிலை
மையில் தான். அவர்கள் இந்த முறையைக் கையாண்டு முன்னுக்கு
வந்திருக்கிறார்கள் என்பது, நேரில் போய்ப் பார்த்திருக்கிற,
கனம் தொழில் துறை மந்திரி அவர்களுக்கு, என்னைவிட நன்றாகத்
தெரியும். எதற்காகச் சொல்ல ஆரம்பித்தேன் என்றால், மனிதன்
மனிதனாக வாழவேண்டும், அரசாங்கத்தின் அடிமையாகக் கூடாது
-00 .m. என்பதற்காக. 1917-ல் சோவியத் அரசாங்கம் கம்யூனிச தத்துவத்
தில் அரசாங்கம் நடத்துவதற்கு முன்னால் தங்களுக்கு வேண்டிய
உணவை உற்பத்தி செய்து மிச்சமிருந்ததை அமெரிக்கா, மேற்கு
ஐரோப்பா, இங்கிலாந்து போன்ற நாடுகளுக்கு ஏற்றுமதி செய்து
வந்ததை உலகம் அறியும். 1917-க்கு பின்னால் கம்யூனிஸ்ட்
அரசாங்கம் ஏற்பட்டதிலிருந்து இன்றுவரையில் அந்த நாட்டில்
மக்களுக்குத் தேவையான உணவை அவர்கள் உற்பத்தி செய்ய
வில்லை. அமெரிக்காவையோ பாக்கி நாடுகளையோ நம்பித்தான்
உணவு இறக்குமதி செய்கிறார்கள் என்பதைப் பார்க்கவேண்டும்.
அதனால் மக்களுக்கு எந்த முறையில் நன்மை ஏற்படுகிறது
என்பதை அரசாங்கம் உணர வேண்டுமென்றுதான் திரும்பத்
திரும்ப சொல்லிக்கொள்கிறேன். திட்டங்களைப் போடும்போது
அவையெல்லாம் நிதானமாகச் செய்யலாமே என்று சொன்னோமே
தவிர திட்டமே வேண்டாமென்று சொல்லவில்லை. ஆனால் பொய்ப்
பிரசாரத்திற்காக சுதந்திர கட்சிக்காரர்கள் திட்டமே வேண்டா
மென்று எதிர்க்கிறார்கள் என்று பேசிவருகிறார்கள். அதைப்பற்றி
கவலைப்படவில்லை. இப்போது சந்தோஷமான செய்தி என்ன
வென்றால் அன்று ராஜாஜி போன்ற சுதந்திராக்கட்சிக் காரர்கள்
சொல்லியதை இன்று அரசாங்கம் உணரும் சந்தர்ப்பம் ஏற்பட்
டிருக்கிறது என்பதைப் பார்க்கும்போது எல்லோரும் அவர்களை
பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறோம். திட்டம் தேவைதான்.
ஆனால் அரசாங்கத்தின் மூலமாகத் தான் சகலமும் நடக்க
வேண்டுமா ? மக்கள் முன்னேற்றத்திற்கு வேண்டியதைச் செய்ய
வேண்டாமா ? மக்கள் ஏற்று செய்தால் அதை பிரைவேட் செக்டர்
என்கிறார்கள். மூன்று ஐந்தாண்டுத் திட்டங்களைப் போட்டு
விட்டோம். அதைப்பற்றி சொல்லாமல் இருக்க முடியவில்லை.
இருந்தாலும், பேப்பர்களில் அதைப்பற்றி வந்திருக்கிறது.

We have now come to the paradoxical situation and often wonder where our plans have taken the country to. We are in blind lanes.
இங்கிருக்கிறவர்கள் இதைப் புரிந்துகொள்வார்களாதலால் அதை தமிழ்ப்படுத்தி சொல்ல விரும்பவில்லை. மூன்று திட்டங்களால் யாருக்கு நன்மை ஏற்பட்டது ? தெருத்தெருவாகச் சென்று பிரசாரம் செய்கிறோம். ஏழைகளுக்காகவே நாம் திட்டங்களைப் போட்டோம், அவர்களுக்கே நன்மை செய்கிறோம், அவர்களுக்காகவே அரசாங்கத்தை நடத்துகிறோம், என்றெல்லாம் சொல்கிறார்கள். வாஸ்தவம் தான். ஏழைகள் எந்த நாட்டில் இல்லை ? இருந்தாலும் ஏழைகள் பணக்காரர்களாக ஆவதற்காகத்தான் திட்டம் போடுவார்கள். இந்த மூன்று ஐந்தாண்டுத் திட்டங்களால் ஏழைகள் மேலும் பரம ஏழைகளாக போய்க்கொண்டிருக்கிறார்கள் என்பதை முக்கிய தலைவர்கள் சொல்வதை அரசாங்கம் புரிந்துகொள்ள

வேண்டுமென்று ஆசைப்படுகிறேன். மூன்ருவது திட்டத்தினுல் இதுவரையில் மத்திய அரசாங்கத்தில் நாடு பூராவுக்கும் கிட்டத் தட்ட 14,060 கோடி செலவு செய்து இருக்கிறேம். இப்போது நாம் 750 கோடி செலவு செய்யப் போகிறேம். அதைப் பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறேம். இருந்தாலும் இன்றைய நிலைமை என்ன? யாராவது தன்னிறைவு கொண்ட வாழ்வு வாழ முடி கிறதா? சிரமம் இல்லாத ஏழைகள் பற்றி, பணக்காரர்கள் பற்றி சொல்லவில்லை. யாராவது நிம்மதியாக வாழ இந்த நாட்டில் இடம் இருக்கிறதா? பொதுவாக தமிழ் நாட்டில் எவ்வளவு தூரம் நம்மால் கொடுக்கமுடியுமோ அதை சிரமப்பட்டு வரியாகக் கொடுக்கிறேம். ஏமாற்றுகிருர்கள் என்றும் சொல்கிருர்கள். ஏமாற்றுதல் ஏன் ஏற் படுகிறது? அதிக வரி போட்டால் ஏமாற்றுதல் ஏற்படும் என்பது உலகம் அறிந்த உண்மை. இப்போது ரூபாயின் மதிப்பு கீழே போய்விட்டது. பத்து பதினைந்து வருஷங்களுக்கு முன் ஒரு ரூபாயை எடுத்துக் கொண்டு ஒரு மனிதன் வாங்குகின்ற அளவு சாமான்களை இப்போது வாங்கமுடியவில்லை. இன்று ரூபாயின் மதிப்பு எவ்வளவு இருக்கிறது? வாங்கிய கடனைக் கொடுக்க முடியவில்லை. வட்டிக் கொடுக்கவே திண்டாடுகிறேம். உள்நாட்டில் வாங்கிய கடன் வேறு இருக்கிறது. இந்த நிலையில் மேலும் வரிபோட்டு கடன் வாங்கி திட்டம் போட்டுக் கொண்டு போனுல் என்ன நிலைமையாகும் என்று அரசாங்கம் யோசித்துப் பார்க்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இதைப் புரிந்துகொள்ளாமல் இருக்கிருர்கள். நம்மால் நமது பொருளாதாரத்தைக் கொண்டு சுமக்கக் கூடிய அளவில் இந்தத் திட்டத்தை சீர்திருத்தம் செய்து எல்லோரும் ஒப்புக்கொள்ளும்படி எந்தெந்த திட்டத்தை ஒதுக்கிவைத்து எந்தெந்த திட்டங்களை மக்களுக்கு உடனடியாகச் செய்யவேண்டுமென்று யோசித்து மறு பரிசீலனை செய்தால் நாட்டு மக்களுக்கு நல்லது. திட்டங்களினுல் மக்கள் தொகைதான் அதிகமாகிக்கொண்டு போகிறது. அதைத் தடுக்க கட்டுப்பாடு திட்டங்களை அரசாங்கம் செய்துவருகிறது. ஒப்புக்கொள்கிறேன். இதனுல் எல்லாம் நாம் எதிர்பார்க்கும் நன்மை ஏற்பட்டுவிடாது. மூன்ருவது திட்டத்தில் 15 ஆயிரம் கோடி ரூபாய் செலவு செய்து நாம் கண்ட பலன் என்ன? மருத்து வம் சரியாகக் கிடைக்கிறதா? கிராம நகரங்களில் சுகாதாரம் சரியாக இருக்கிறதா? கல்விக்கு இவ்வளவு கோடிக்கணக்காக செலவு செய்கிறேமே, அதில் தரம் இருக்கிறதா? படித்தவர்கள் மேல் படிப்புக்குப் போகவேண்டுமென்ருல் முடிகிறதா? ஹைஸ்கூல் எலிமெண்டரி ஸ்கூல், காலேஜுகளில் இடம் சாதாரணமாகக் கிடைக்கிறதா? நிறையப் பணம்தான் செலவழிக்கிறேம். மக்கள் அதிகமாகப் பிறக்கிருர்கள், என்ன செய்வது என்று சொல்வார்கள். சிரமம் வரத்தான் செய்யும். இதைவிட்டு விவசாயத்தைப் பார்த் தால் அதில் தன்னிறைவு கண்டோமா? முதல் திட்டம் முடிந்த வுடனேயே உணவுப் பஞ்சம் தீர்ந்துவிடும் என்று சொன்னுர்கள். இரண்டாவது திட்டம் ஆரம்பிக்கும்போது இப்போது அவசியம்

பஞ்சம் போய்விடும் என்று சொன்னார்கள். மூன்றாவது திட்டமும் முடிந்துவிடப் போகிறது. இன்றாவது அந்த பஞ்ச நிலை தீர்ந்தது என்றால் தீரவில்லை. காரணம் கேட்டால் திட்டம் நல்லவிதமாக நிறைவேற வேண்டுமென்றால் இந்த நாட்டில் ரேஷன் கட்டாயமாக வரவேண்டுமென்கிறார்கள். நாங்கள் சொன்னாலும் சொல்லாவிட்டாலும் ரேஷன் கொண்டுவரத்தான் போகிறார்கள். நமது மாநில முதன் மந்திரி அவர்களுடைய பேச்சை, உணவு ரேஷன் கண்ட்ரோலைப் பற்றி அவர்கள் அவ்வப்போது பேசிய பேச்சை ஒரு 'வெள்ளை அறிக்கை' யாக அச்சிட்டு இந்த மன்றத்தில் அரசாங்கம் வைக்குமா என்று கேட்டுக்கொள்கிறேன். இந்த மாநில அரசாங்கம் அந்த நிலைமையில் இருக்கிறது. முதல் மந்திரி நினைப்பதை அவர்களால் செய்யமுடிகிறதா? எதற்கெடுத்தாலும் மத்திய அரசாங்கம் சொல்வதைச் செய்யும் நிலைமை இருக்கிறது. வெள்ளைக்காரன் காலத்தில் ஜில்லா போர்டு முனிசிபாலிடிகளுக்கு இருந்த அதிகாரம் கூட இன்றைக்கு நமக்கு இருக்கிறதா என்பது சந்தேகமாக இருக்கிறது. முதல் மந்திரி அவர்கள் பலமுறை சொல்லியிருக்கிறார்கள், உணவு ரேஷன் தேவையில்லை என்று. தமிழ் நாட்டில் உணவு கண்ட்ரோல் எதற்காக? நாம் தேவைக்கு அதிகமாகவே உற்பத்தி செய்கிறோம். அதைப்பற்றியெல்லாம் இன்னும் இரண்டு நாட்கள் கழித்து பேசலாமென்று இருக்கிறேன். படிக்கு நான்கணா அரசாங்கம் சர்சார்ஜ் என்றும் விற்பனை வரி என்றும் பலமுறையில் வசூலிக்கிறார்கள். இவ்வளவு தூரம் வசூலித்துக் கொண்டு பொதுமக்களுக்கும் ஏழைகளுக்கும் குறைந்த விலையில் செய்கிறோம் என்று சொல்கிறார்கள். கனம் திரு. பாலசுப்ரமணிய அய்யர் அவர்களும் விவசாயத்தைப் பற்றி சொன்னார்கள். விவசாயிகளுக்கு வரி வஜா கொடுக்கவேண்டுமென்று சொன்னார்கள். உணவு தானியத்திற்கு விதிக்கப்பட்டுள்ள வரிகளை அத்தனையையும் எடுத்தால்தான் மக்கள் கொஞ்சமாவது ஒழுங்காக வாழும் நிலைமை ஏற்படும். இப்போது உற்பத்தியாகிற உணவுப் பொருள்களில் எத்தனை சதவிகிதம் சேதமாகிறது என்பது அரசாங்கத்திற்கு நன்றாகத் தெரியும். அதையெல்லாம் கண்காணித்துத் திட்டத்தை போடுவதில் ஆட்சேபனையில்லை. அதற்காக ஒத்துழைக்கக் காத்திருக்கிறோம். மக்கள் அழிவிற்கு திட்டம் போடாமல் சுக வாழ்வுக்கு திட்டமிடவேண்டுமென்று கேட்டுக் கொண்டு இப்போது அதிகம் பேச சந்தர்ப்பமில்லாததால் மற்றொரு சமயத்தில் மற்றவை பற்றி பேச ஆசைப்படுகிறேன். திட்டம் என்பது முன்னேற்றத்திற்காக நல்வாழ்விற்காக இருக்கவேண்டும்.

The plans are for our prosperity and not plans for our perishing.

அரசாங்கத்துறை வேண்டுமா மக்கள் துறை வேண்டுமா? அரசாங்கத்துறை வேண்டுமென்றால் ரஷ்யா மாதிரி, சீனா மாதிரி ஒரே முடிவுக்கு வந்துவிடலாம். அரசாங்கத்துறைக்கு ஆதரவும் கிடைக்கலாம். அதுவுமில்லாமல், மக்கள் துறையும் இல்லாத இரண்டும் கெட்டான் நிலையில் எதையும் செய்யவேண்டாமென்று சொல்லிக்கொண்டு, மக்களுக்கு அனுகூலம் செய்யும் வகையில்

6th August 1965] [திரு. எம். சுப்பையா செட்டியார்]

திட்டங்களை மறுபரிசிலனை செய்து குறைந்த அளவில் சுமக்கும் படியான திட்டம் போடவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, எனக்கு பேச சந்தர்ப்பம் அளித்த தலைவர் அவர்களுக்கு நன்றி தெரிவித்து என் பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

VICE-CHAIRMAN : The House will now adjourn and meet again at 3 p.m. to-morrow. 6–11 a.m.

The House then adjourned.

## IV.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

### A. Statutory Rules and Orders.

* 172. *Notification issued with G.O. Ms. No. 759, Home, dated 3rd March 1965 making amendment to the Home Department Notification II-1, No. 2740 of 1964, dated the 20th June 1964. [Laid on the Table of the House under section* 11 (2) *of the Madras Motor Vehicles Taxation Act,* 1931 *(Madras Act III of* 1931).]

* 173. *Notification issued with G.O. Ms. No.* 1311, *Home, dated 9th April 1965, directing the tax payable in respect of lorry bearing registration No. MDJ 1358 belonging to the St. Mary's High School and Orphanage, Vellore, be fixed at Rs. 180 per quarter so long as the said lorry is used exclusively for the transport of materials, etc., for the said educational institution and orphanage. [Laid on the Table of the House under section* 11 (2) *of the Madras Motor Vehicles Taxation Act,* 1931 *(Madras Act III of* 1931).]

* 174. *Notification issued with G.O. P. No. 1909, Revenue, dated 23rd June 1965, making amendment to the First Schedule to the Madras General Sales Tax Act, 1959. [Laid on the Table of the House under section* 53 (5) *of the Madras General Sales Tax, Act 1959 (Madras Act I of 1959).]*

* 175. *Notification issued with G.O. Ms. No. 697, Rural Development and Local Administration, dated 22nd March 1965, making amendments to the rules for the regulation of the use of quarry right in lands vested in the panchayat. [Laid on the Table of the House under section* 179 (4) *of the Madras Panchayats Act, 1958 (Madras Act XXXV of 1958).]*

* 176. *Notification issued with G.O. Ms. No. 1201, Rural Development and Local Administration, dated 25th May 1965, regarding inclusion of certain areas within the limits of the Kodai-*